28th January 1961]

*Mettur Reservoir*

* 213 Q.—Sri R. SRINIVASA IYER: Will the Hon. the Minister for Works be pleased to state whether the Government propose to depute Engineers to inspect the entire length of Cauvery and its tributaries to find out and report to Government the present state of these and how far their free flow have been obstructed and their impact on the irrigation source of this State, viz., the Mettur Reservoir?

The Hon. Sri P. KAKKAN: No, Sir.

**Sri R. SRINIVASA IYER:** ஏற்கெனவே இந்த மேட்டூர் ரிசெர்வாயருக்கு வரக்கூடிய தண்ணீரைப்பற்றி ஏற்பட்ட ஒப்பந்தம் சம்பந்தமாக, மைசூர் சர்க்கார் பாதகமாக நடந்து கொண்டு வருகிறார்கள் என்று சபையில் அறிவிக்கப்பட்டது. எவ்வளவு தூரம் காவேரி நதிக்கு வரக்கூடிய தண்ணீரை அவர்கள் தடுத்து வருகிறார்கள் என்பதைத் தெரிந்துகொள்வதற்கு, இங்கிருந்து என்ஜீனியர்களை அனுப்பாவிட்டாலும், ஏதாவது பரிசீலனை செய்யப்பட்டு வருகிறதா, எந்தெந்த அணைகள் கட்டப் பட்டிருக்கின்றன என்று தெரிவிக்க முடியுமா? காவேரி நதிக்கு வரும் தண்ணீர் எவ்வளவு தூரம் தடை செய்யப்பட்டிருக்கிறது என்பதை, என்ஜினியர்களை அனுப்பித் தெரிந்துக்கொள்ளா விட்டாலும், வேறு வகையில் தெரிந்துகொள்வதற்கு வழிவகை செய்யப்பட்டு வருகிறதா?

**The Hon. Sri P. KAKKAN:** ஏற்கெனவே இப்பேற்பட்ட கேள்விகளுக்கு நான் பதில் சொல்லியிருக்கிறேன். கனம் நிதி அமைச்சர் அவர்களும், இப்பேர்ப்பட்ட கேள்விகள் பொது மக்களுக்கு நல்ல பயனை அளிக்காது, நன்மையைத் தராது என்ற கருத்தைத் தெரிவித்திருக்கிறார்கள். ஆகவே இரண்டு அரசாங்கங் களும் எவ்வளவு சுமுகமாக இதைப் பரிசீலனை செய்து முடிவு செய்ய முடியுமோ, அதை எல்லாம் செய்துகொண்டு வருகிறார்கள். இப்படிப்பட்ட கேள்விகள் போடுவதினால் நமக்கு நன்மை பயக்காது என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

Sri R. SRINIVASA IYER: The Tamil translation of the question does not seem to be correct. I bring it to the notice of the Hon. Speaker.

*Treasury for Vedaranyam*

*** 215 Q.—Sri A. VEDARATHNAM:** கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வேதாரண்யம் சப்-தாலூகாவில் ஏற்படுத்த உத்தேசித் திருந்த கஜானா (Treasury) எப்போது நிறுவப்படும்?

(இ) அது இல்லையானால் அங்கு ஒரு ஸ்டேட் பாங்காவது நிறுவப்படுமா?

[28th January 1961

THE HON. SRI M. A. MANICKAVELU : (அ) It is proposed to open a sub-treasury at Vedaranyam as early as possible.

(இ) Does not arise.

**SRI A. VEDARATHNAM :** எவ்வளவு காலத்திற்குள் இந்த கஜானா அங்கே திறக்கப்படும் என்பதைத் தெரிவிக்க முடியுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : I have just now stated " as early as possible ".

MR. SPEAKER : The hon. Member Sri K. Vinayakam requested that question No. 216 may be postponed to 30th instant. I have agreed to it.

*Zamin forest*

* 217 Q.—SRI K. R. VISWANATHAN : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) the extent of erstwhile zamin forest area in Suriamanal village in Udayarpalayam taluk occupied separately for cultivation and living purposes by the ryots of Suriamanal and surrounding villages;

(*b*) the period for which this area was in their occupation; and

(*c*) the action taken by the Government to evict the ryots from this area?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) The total extent of Suriamanal Forest area (erstwhile zamin forest area) in Suriamanal village in Udayarpalayam taluk is 197 acres and 23 cents. Out of this, an extent of 132 acres is under the occupation and cultivation by ryots of Suriamanal and other surrounding villages and an extent of 0.16 cents is under occupation by construction of thatched houses for living. An extent of 50 acres has been allotted temporarily to Irulars and they are in occupation.

(*b*) These occupations have been in existence for the last three faslis, i.e., faslis 1367, 1368 and 1369.

(*c*) No proceedings have been taken to evict these encroachments. All these encroachments have been brought to ' B ' memo. Proposal for allotting these lands to landless poor people is under consideration of the Collector of Tiruchirappalli.

**SRI K. R. VISWANATHAN :** இந்த சூரியமணல் காட்டிலுள்ள நிலங்களை பல நூற்றுக்கணக்கான குடியானவர்கள் சாகுபடி செய்துகொண்டும், அதிலே குடியிருந்துகொண்டும் வருகிறார்கள். அவற்றை அடமானம் செய்து கொடுக்கவேண்டுமென்று பல ஆண்டுகளாகக் கேட்டுக்கொண்டு வருகிறார்கள். ஆனால் சர்க்கார் அப்புறப்படுத்துவோம் என்று பயமுறுத்துகிறது. இறுதியாக அவர்கள் சர்க்காருக்கு அப்பீல் செய்துகொண்டிருக்கிறார்கள். கூடுமான விரைவில் இந்த நிலங்களை அடமானம் செய்துகொடுப்பதற்கு சர்க்கார் முன்வருவார்களா என்று அறிய விரும்புகிறேன்.